25th August 1955]

SRI V. V. RAMASWAMI :—" தமிழிலே சரியான சொற்கள் இல்லாததினால் சரியானபடி அரசாங்க அலுவல்களை தமிழிலே நடத்த முடியவில்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆகவே, நிர்வாகத்திற்கு தகுந்த சொற்களை பொறுக்கி எடுப்பதற்காக ஒரு தனிக் கமிட்டியை அரசாங்கம் ஏற்படுத்துமா ?"

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" தமிழிலே சரியான சொற்கள் இல்லை என்று ஒருக்காலும் நான் சொல்லவில்லை. சொல்லவும் மாட்டேன். தமிழிலே சொற்கள் இல்லாமல் இல்லை. ஆனால், நாம் பிரயோகிக்கிற வார்த்தைகள் சில புரியாதனவாக இருக்கின்றன. இதையெல்லாம் ஆராய்ந்து எந்த விதத்திலே தாலூகா காரியாலயங்களிலே தமிழிலேயே நிர்வாகத்தை நடத்துவது என்ற முயற்சி செய்யப்பட்டு வருவதால், இதுபற்றி வேண்டிய நடவடிக்கைகளையும் அரசாங்கம் எடுத்துக்கொண்டுதான் வருகிறது."

SRI M. P. GOVINDA MENON :—" When the Government consider this question of making the vernacular the official language in taluks, will the Hon. Minister take into consideration the suitability of adopting Malayalam language in some taluks of the Malabar district also? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" I may tell the hon. Member that Government do consider without any doubt or hesitation that Malabar does form part of the State of Madras to-day."

SRI A. SUBRAMANYAM :—" தமிழிலே பேசப்படும் இப்பொழுது பழக்கத்தில் உள்ள வார்த்தைகளையே ஏன் புகுத்தி அதையே ஏன் செயலில் கொண்டுவரக்கூடாது என்று கேட்கிறேன் ?"

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" அதை அவசியம் செய்யலாம். அதற்கு ஒன்றும் தடை இல்லை."

SRI V. V. RAMASWAMI :—" தாலூகா ஆபீசு, கலெக்டர் ஆபீசுக்கு வரும் தமிழ் மனுக்களை திருப்பி அனுப்பும்போதாவது ஆரம்ப முயற்சியாக பதில் தமிழிலேயே தெரிவிக்கப்படுமா ? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" தாலூகா காரியாலயங்களில் அலுவல்களை தமிழிலேயே நடத்துவது என்ற முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டு நிறைவேற்றப்படும் பொழுது அதையெல்லாம் கவனிக்கப்பட்டுத்தான் வரும்."

MR. CHAIRMAN :—" Question No. 357 will be taken up to-morrow."

DR. A. SREENIVASAN :—" Sir, I may not be in Madras to-morrow. Will you please take it up the day atfer to-morrow? "

MR. CHAIRMAN :—" That is on the 27th? Yes, we will take it up on the 27th."

*Recommendations of the Rice Milling Committee.*

* 358 *Q.*—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether the Government have considered the recommendations of the Rice Milling Committee appointed by the Government of India for the replacement of rice mills by the hand-pounding industry; and

[25th August 1955

(b) if so, the steps proposed by the Government for implementing those recommendations?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" (a) & (b) The Rice Milling Committee has submitted its report to the Government of India. The Madras Government are awaiting the decisions of the Government of India on the recommendations of the Rice Milling Committee."

3-10 p.m. SRI V. V. RAMASWAMI :—" இந்திய சர்க்காரிடமிருந்து முடிவான பதில் வரும்வரையில் இப்பொழுது இருக்கின்ற ரைஸ் மில்களுக்கு கொடுக்கின்ற லைசென்சுகள் இனிமேல் புதிதாகக் கொடுக்கிறதில்லை என்ற முடிவுக்குத்தான் நம் அரசாங்கம் வந்திருக்கிறதா ? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" புதியதாக லைசென்சு கொடுக்கும்போது நன்கு பரிசீலனை செய்துதான் கொடுக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் அபிப்பிராயம்."

*Starting of new industries under the Second Five-Year Plan.*

*359 Q.—SRI V. V. RAMASWAMI : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(a) whether the South India Chamber of Commerce presented a memorandum to the Government on 6th June 1955 in regard to the starting of new industries under the Second Five-Year Plan;

(b) if so, the points raised therein;

(c) whether the Government have considered them; and

(d) if so, what steps have been taken to implement them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" (a) Yes, Sir.

" (b) The Southern India Chamber of Commerce made certain suggestions for the establishment of new industries in Madras State.

" (c) & (d) The Government have examined the suggestions. Some of the schemes proposed by the Chamber had already been suggested by the two Committees for Large and Medium Scale Industries and Small Scale and Cottage Industries constituted by Government in April 1955. The schemes have been included in the draft Second Five-Year Plan for Madras which has been forwarded to the Planning Commission."

SRI V. V. RAMASWAMI :—" தென் இந்திய வர்த்தக சங்கம் தங்களுடைய கோரிக்கையிலே தொழில் நிபுணத்துவம் வாய்ந்தவர்களையும், எல்லாத் தொழிலதிபர்களையும் கொண்ட ஒரு நிபுணர் குழுவை (Board of Technicians) ஏற்படுத்தவேண்டும் என்ற யோசனையை குறிப்பிட்டிருந்தார்கள். அதைப்பற்றி அரசாங்கம் கவனிக்குமா ? "

THE HON. SRI M. BHAKTAVATSALAM :—" இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் உருவாக்கப்பட்டு முடிவு செய்யப்பட்டு எடுத்துக்கொள்ளப்படும் பொழுது இதையெல்லாம் யோசிக்கலாம்."